# கவுந்தப்பாடி
# சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்
# பொன்விழா ஆண்டு மலர்

## 1953 - 2002




சேவாரத்னா டாக்டர்

**P. குப்புசாமிமுதலியார்**

அறிவாலயம்

விழா நாள் : 02-06-2002 ஞாயிற்றுக்கிழமை

## கவுந்தப்பாடி
## சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின்
## பொன்விழா ஆண்டின்
## (2001 - 2002)

### நிர்வாகக் குழு உறுப்பினர்கள்

உயர்திரு. **P. குப்புசாமிமுதலியார்** அவர்கள் தலைவர்

உயர்திரு. **K.P. ராமலிங்கம்** அவர்கள் துணைத்தலைவர்

உயர்திரு. **A.P. ஆறுமுகம்** அவர்கள் செயலாளர்

உயர்திரு. **P. குழந்தைவேல்** அவர்கள் துணைச்செயலாளர்

உயர்திரு. **P. நாராயணன்** அவர்கள் பொருளாளர்

### செயற்குழு உறுப்பினர்கள்

உயர்திரு. **S.P. அண்ணாமலை** அவர்கள்

உயர்திரு. **K.P. சிவலிங்கம்** அவர்கள்

உயர்திரு. **K. தவசியப்பமுதலியார்** அவர்கள்

உயர்திரு. **G. தங்கவேல்** அவர்கள்

உயர்திரு. **A.M. நல்லசாமி** அவர்கள்

உயர்திரு. **R.N. நடராஜன்** அவர்கள்

உயர்திரு. **M.S. பழனியப்பன்** அவர்கள்

உயர்திரு. **K. பழனியப்பன்** அவர்கள்

உயர்திரு. **M.A. மாரிமுத்து** அவர்கள்

உயர்திரு. **K. மாரிமுத்து** அவர்கள்

உயர்திரு. **S. முருகேசன்** அவர்கள்

உயர்திரு. **P.P. ராமசாமி** அவர்கள்

உயர்திரு. **N. ராமசாமி** அவர்கள்

உயர்திரு. **S. லட்சுமணன்** அவர்கள்

உயர்திரு. **A. விநாயகம்** அவர்கள்

உயர்திரு. **P.P. வெங்கடாசலம்** அவர்கள்

# மலரும் முன்...

பொன்விழா ஆண்டில் அடி எடுத்து வைக்கும்
நமது சங்கம் கடந்து வந்த பாதை...

- 1953 மே 17ஆம் நாள் 17 உறுப்பினர்களுடன் ஆரம்பிக்கப்பட்டது.
- 1953 மே மாதம் சங்க கட்டிடம் வாங்கப்பட்டது.
- ஆரம்ப சுகாதார நிலையத்து இடம் முழுவதும் நன்கொடையாக வழங்கப்பட்டது.
- கவுந்தப்பாடி மகளிர் உயர்நிலை பள்ளி துவங்க ரூ.10,000/- நன்கொடையாக வழங்கப்பட்டது.
- சங்க நிர்வாகத்தின் கீழ் கலைமகள் வித்யாலயம் ஆங்கிலப் பள்ளி நிறுவப்பட்டு செயல்பட்டு வருகின்றது.
- சங்க கட்டிடத்தில் மேல்நிலை தொட்டி அமைத்து பொதுமக்களுக்கு குடிநீர் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது.
- 1999 மே நமது சங்கத்தின் சார்பில் போரில் வீர மரணமடைந்த நமது ராணுவ வீரர்கள் குடும்பத்திற்கு கார்கில் நிவாரண நிதியாக ரூ.1 லட்சம் மாவட்ட ஆட்சியர் வசம் வழங்கப்பட்டது.
- குஜராத்தில் ஏற்பட்ட பூகம்பத்தில் பாதிக்கப்பட்ட நமது சகோதரர்களும் சங்க உறுப்பினர்களின் சார்பில் நிதியுதவி, பொருளுதவி செய்யப்பட்டது.
- கல்விப் பணியில் தகுதி இருந்தும் மேல் படிப்புக்கு தொடர ஏழை மாணவ, மாணவியர்களுக்கு சங்கத்தில் நிதியுதவி செய்யப்பட்டது.
- மருத்துவ உதவி வேண்டி சங்கத்தினரை அணுகிய ஏழை மக்களுக்கு நிதியுதவி வழங்கப்பட்டது.

**C.K. குமாரசுவாமி** M.A., B.L.,
முன்னாள் பதிவாளர்,
சென்னை பல்கலைக்கழகம்,
10, சந்தன மரக்கிடங்கு ரோடு,
வடக்கு பேட்டை, சத்தியமங்கலம்,
ஈரோடு மாவட்டம்.

## உழைப்பின் வாரா
## உறுதிகள் உளவோ

மேற்கண்ட தலைப்பின் பால் உறுதியான நம்பிக்கை கொண்டவன் நான். என் வாழ்க்கை வரலாறு பிறருக்கும், குறிப்பாக இளைஞர்களுக்கும் ஒரு பாடமாக அமைய வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு உண்டு. காரணம், நான் உழைப்பின் உறுதியால் படிப்படியாக முன்னேறி சிறந்த உழைப்பாளன் என டாக்டர். A.L. முதலியார் தாமரைத்திரு. N.T. சுந்தரவடிவேலு டாக்டர். மால்கம் ஆதிசேஷையா, அவனாசிலிங்கம் நிகர்நிலை பல்கலைக் கழகத்தின் வேந்தராக பணியாற்றி அண்மையில் உயிர் நீத்த அம்மா டாக்டர். ராஜம்மாள் தேவதாஸ் போன்ற சிந்தனையாளர்கள் அன்பைப் பற்றி எழுதி விட்டுச் சென்ற எழுத்துக்கள் என் உழைப்பின் உறுதிக்கும் பணியின் சிறப்பிற்கும் எடுத்துக்காட்டாகும். (பார்க்க எனது பொன்விழா மலரில் நான் எழுதி வெளிவந்த MY REMENICENSES என்ற சிறப்புக்கட்டுரை.)

என்னைப் பற்றி அதிகம் எழுதிவிட்டதாக குறை வந்தாலும் நான் நம்மவர்பால் குறிப்பாக நம் இளைஞர்பால் கொண்டுள்ள ஆர்வம், அவர்கள் என்னைப் போலவே ஒரு உயர்ந்த நிலைக்கு வந்து வாழ்வாங்கு வாழ வேண்டும் என்ற எண்ண அலைகள் தான் காரணமாகும் என்பதை எண்ணிப் பொறுத்தருள வேண்டும்.

சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம் சிறப்பான பணியைச் செய்து கொண்டு இருக்கிறது என்ற சிறப்பைப் பெற்றது. “செய்யும் தொழிலைச் சீர்தூக்கிப் பார்க்கின் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை” என்பதில் எனக்கு எந்த ஐயப்பாடும் இல்லை. “நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்” என்ற வாக்கினை உணர்த்த வேறு தொழில் இல்லை என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை. நெய்யும் தொழில் செய்வோர் யாருக்கும் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. ஏனெனில் அந்த தொழிலில் தில்லுமுல்லு செய்வதற்கோ பிறர் மனதைப் புண்படுத்துவதற்கோ இடமில்லை.

பல ஆண்டுகளுக்கு முன் சேலத்திலே செங்குந்தர் மாநாட்டில் உரையாற்றிய போது நான் சொன்னேன். நெய்யும் தொழில் சிறந்த தொழில்தான். ஆனால் அது நெசவாளர்களுக்கு விடிவெள்ளியா என்றால் இல்லை என்பதே நமக்கு கிடைக்கும் பதில். வறுமைக்கோட்டில்தான் நம்மில் பெரும்பாலோர் வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் வாழ்க்கை வளம் பெற அரசு ஆவண செய்ய வேண்டும். அதே நிலைதான் இன்னும் நீடிக்கிறது என்பது என் கணக்கு. இந்த நிலை மாற வேண்டும்.அந்த அப்பாவி மக்களுக்கு ஜவுளி வர்த்தகர் சங்கம் ஒரு தனி அமைப்பை உருவாக்கி பணம் ஈட்டி நெசவாளர் குடும்பங்களில் திறமை மிக்க மாணவ,மாணவிகளுக்கு பண உதவி செய்து அவர்களை நாட்டின் வளமிக்க நன்மக்களாக உருவாக்க வேண்டும் என்ற என் இதய ஆசையை உங்கள் முன் வைக்கிறேன். நம்மவர் கல்விச் சேவைக்கு நானிட்ட வித்து தவறான இடங்களில் இடப்பட்டுவிட்ட காரணத்தால் என் முயற்சியும் உழைப்பும் விழலுக்கு இறைத்த நீராகி விட்டதை நீங்கள் மனதில் இருத்தி உங்கள் உதவி நம் ஏழை மக்களுக்கு சென்றடைய வழி வகுத்து செயல்படுத்துங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

வாழ்த்துக்களுடன்...

*C.K. குமாரசுவாமி.*



# எவ்வழி நல்வழி



**S. வையாபுரி முதலியார்**
தொழிலதிபர்,
**521/595,** பெருந்துறை ரோடு,
ஈரோடு - 638 001.

பொன்விழா ஆண்டில் மிக குறுகிய காலத்தில் மிகச் சிறப்பான முறையில் சங்கத்திற்கு சொந்தக் கட்டிடம் என்ற அமைப்பினை உருவாக்கிய தலைவர் திரு. **P.K.** அவர்களுக்கும், சங்க நிர்வாகிகள் மற்றும் அனைத்து உறுப்பினர்களுக்கும் எனது நன்றி கலந்த வணக்கம்.

நமது இந்திய திருநாடு மகாத்மா காந்தியடிகளின் பல போராட்டங்களின் விளைவாக ஆங்கிலேயரிடமிருந்து சுதந்திரம் அடைந்தது. காந்தியடிகளின் போராட்டங்களில் உப்பு சத்தியாகிரக போராட்டம் ஒரு சிறப்பானது. தமிழகத்தில் திரு. ராஜாஜி அவர்கள் தலைமையில் வேதாரண்யத்தில் உப்பு காய்ச்சும் போராட்டத்திற்கு பல பகுதியிலிருந்து மக்கள் கால்நடையாக நடந்து வந்தனர். அவ்வாறு வரும் போராட்ட வீரர்களுக்கு பொதுமக்கள் உணவு, தங்குமிடம் முதலிய எந்த விதமான உதவியும் செய்யக்கூடாது என ஆங்கிலேய அரசு அதிகாரிகள் கெடுபிடிகள் செய்தனர்.

காந்தியடிகளின் இந்த போராட்டம் "கத்தியின்றி ரத்தமின்றி" நடக்கும் போர்முறை. இது உலகிற்கு புதிது. அன்றுவரை பழக்கப்பட்ட முறைகளுக்கு நேர்மாறானது. உதைக்கு உதை. குத்துக்கு குத்து. வெட்டுக்கு வெட்டு. பழிக்கு பழி என நம்மில் இரண்டற கலந்து வந்த இந்த இயல்புக்கு மாறாக அமைந்தது. காந்தியடிகளின் போராட்ட முறை. தன்னை வருத்திக் கொள்ளல், பிறருக்கு தீங்கு செய்யாமை, பகைவரையும் திருப்பி தாக்காத அருளுணர்வு என்பது காந்தியடிகளின் வழியாகும்.

இப்படி காந்திய வழியில் வந்த நம் நாட்டின் இன்றைய நிலை என்ன? எங்கு பார்த்தாலும் போட்டி, பொறாமை, சண்டை, சச்சரவு. ஆகவே இந்நிலைமாறி நமது நாடு சுபிட்சம் அடைய காந்திய வழியே நல்வழியாகும்.

வாழ்த்துக்களுடன்...
*S. வையாபுரி முதலியார்*

வாழ்க சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்
வளர்க சங்கத்தின் நற்பணி

**K. P. ராமலிங்கம்,**
துணைத் தலைவர்,
சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்,
கவுந்தப்பாடி.



அன்பிற்கினியீர்!

இனிய பொன்விழா காணும் கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து கண்களை இமை காப்பது போல் காத்து பல அரியபணிகளை செய்த பெரியவர்கள் திரு.R.A.N.முத்துச்சாமிமுதலியார் திரு.K.முத்துச்சாமிமுதலியார், திரு.P.P.சதாசிவம், திரு.P.குப்புச்சாமிமுதலியார் ஆகியோர் முயற்சியில் வளர்ந்த இந்த சங்கத்தின் வளர்ச்சிப் பணிகள் எண்ணிலடங்கா. இந்த பெரியவர்களின் ஆசியோடு இன்று பொன்விழா ஆண்டில் நம் சங்கத்தின் மழலைச் செல்வங்களின் கல்விக்கு புதியதொரு பள்ளிக் கட்டிடம் திறந்து அதற்கு "P.குப்புச்சாமிமுதலியார் அறிவாலயம்" என பெயர் சூட்டி அவ்விழாவிற்கு பொன்விழா மலரை சென்னை பல்கலைக்கழக முன்னாள் பதிவாளர் திரு.C.K. குமாரசாமி M.A., B.L., அவர்கள் வெளியிட இவ்விழா சிறப்பாக நடைபெற எனது நெஞ்சார்ந்த வாழ்த்துக்கள்!

இங்ஙனம்,
**K.P. ராமலிங்கம்.**



**K. M. தண்டபாணி,**
முன்னாள் செயலர்,
சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்.
166F, கொத்துக்காரர் தோட்டம்,
வீரப்பன் சத்திரம், ஈரோடு-4.

அன்பிற்கினியீர்!

1953-ஆம் ஆண்டு நமது கல்வித் தந்தை R.A.N. முத்துச்சாமி முதலியார் அவர்கள் தலைமையில் K. முத்துச்சாமி முதலியார் P.P. சதாசிவம், P.குப்புசாமி முதலியார், S. வையாபுரி முதலியார் மற்றும் பலரின் பெருமுயற்சியால் சங்கம் உருவாக்கப்பட்டு சங்க உறுப்பினர்களின் ஆதரவோடு சங்கத்திற்கு சொந்தமாக கட்டிடம் வாங்கி அன்றைய முதல்வர் திரு. M.பக்தவச்சலம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

தலைவர் அவர்களின் பெருமுயற்சியினால் கவுந்தப்பாடியில் மருத்துவமனை, பெண்கள் உயர்நிலைப்பள்ளி உருவாகவும், வித்திட்டார்கள். நமது சங்கத்தில் நர்சரி பள்ளியை துவக்கி அதன் வளர்ச்சிக்காகவும் பாடுபட்டார். மேலும் நீர் இன்றி அமையாது உலகம் என்ற வாக்கிற்கிணங்க ஆழ்குழாய் கிணறு மேல்நிலைத் தொட்டி அமைத்து மாவட்ட ஆட்சியர் தலைமையில் அன்றைய அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்களால் திறப்பு விழா செய்து பொதுமக்களுக்கு குடிநீர் வசதி செய்து கொடுத்தார்கள்.

நமது சங்கத்தின் உறுப்பினர்களின் பேராதரவோடு பாலர் பள்ளி முதல் பட்டப்படிப்பு கல்லூரி, தொழில் நுட்பக் கல்லூரி, மகளிர் கல்லூரி ஆகியவைகளை உருவாக்கி பொறுப்புடன் சிறப்பாக பணியாற்றியுள்ளார். நமது சங்கத்தின் வெள்ளி விழாவை நடத்தி பெருமை சேர்த்தார். சங்க வளர்ச்சிக்காக 47 ஆண்டுகள் தொடர்ந்து தலைவராக இருந்து இறுதி வரை பணியாற்றினார்.

நமது சங்கத்தின் புதிய தலைவராக பொறுப்பேற்று கவுந்தி நகரத் தந்தை. திரு. P.குப்புசாமி முதலியார் அவர்கள் சிறப்பாக பணியாற்றியுள்ளார். பொன்விழா ஆண்டில் அறிவாலயம் புதிய கட்டிடத்தை உருவாக்கிய சங்கத்தின் தலைவர் நிர்வாகிகள் மற்றும் உறுப்பினர் பெருமக்களுக்கு எனது நெஞ்சம் நிறைந்த பாராட்டு கூறி நன்றி தெரிவிக்கிறேன். வருங்காலத்தில் சங்கம் அரும்பணியாற்றி ஒளி வீசி திகழும் என்பது திண்ணம். தங்கம் செய்யாததை சங்கம் செய்யும் என்பது பழமொழி. ஓங்குக சங்கத்தின் புகழ் வெல்க சங்க வளர்ச்சிப் பணி!

இப்படிக்கு,
**K.M. தண்டபாணி.**

**M.S. பழனியப்பன்,**
இல்லம் : C-55, சம்பத் நகர்,
ஈரோடு - 638 011.

அலுவலகம் : 24, வெங்கடாசலம் வீதி,
ஈரோடு – 638 001.



அன்பு உள்ளங்களுக்கு வணக்கங்கள்!

நமது சங்கத்தின் 50-வது பிறந்த நாளை மகிழ்வோடு கொண்டாடுவது பெருமையான விஷயமாகும். பொன்விழா ஆண்டில் நுழைந்திருக்கும் நமது சங்கத்தின் வளர்ச்சிகளைக் கண்டு எனது உள்ளம் பூரிக்கின்றது.

கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர்களுக்காக உருவாக்கப்பட்ட இந்தச் சங்கம் பல நல்ல சமூக சேவைகளையும் இந்த மண்ணிற்கு செய்து பல பெருமைகளைப் பெற்றிருக்கின்றது. கல்விப் பணியிலும் சிறந்த முறையில் பணியாற்றி வருகிறது.

இந்தப் பொன்விழா மலரைஉருவாக்கும் நமது தலைவர். திரு. P. குப்புசாமி முதலியார் அவர்கள் இந்தச் சங்கத்தின் வளர்ச்சிக்குப்பாடுபட்ட மாமனிதர். அவருக்கும் அவருக்கு உறுதுணையாக இருக்கும் சங்கத்தை உருவாக்கியவர்களுக்கும் எனது அன்பான பாராட்டுக்கள்! வாழ்த்துக்கள்!!

இந்த நல்ல நேரத்தில் நமது அங்கத்தினர்கள் வணிகத்தை வலிவாக்குவதோடு மட்டுமல்லாமல் மனித நேயத்தோடு மற்றவர்களுக்கு உதவிடும் பண்புகளை வளர்த்துக் கொண்டும் தேசபக்தியை வளர்த்துக் கொண்டும் சிறந்து வாழ எனது கனிவான வாழ்த்துக்கள்!!

வாழ்த்துக்களுடன்...
*M.S. பழனியப்பன்.*

# இளம் வணிகர் நலம் நாடும் சங்கம்
# Young Merchants Welfare Association




Regd. No. 111/1987
12-A, Theppakkulam Street, **ERODE - 638 001.**




President :
**M. VASU,**
VASU TEX, KNM Building,
8, NMS Compound, Erode - 1.
☎ Off : 250742 Res : 259665, 251413.

Secretary :
**M. DHILEEPAN**
DHILEEP MILLS
46, East Perumal Kovil Street, Erode -1.
☎ : 266495 Res : 219987, 226265.

அன்பிற்கினியீர்!

கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்க
உறுப்பினர்களான பொன்விழா நாயகர்கள்
அனைவருக்கும் எங்களது முத்தான
வணக்கங்கள்.

சங்கம் மென்மேலும் உயர்ந்து வளர எங்கள்
மனம் கனிந்த நல்வாழ்த்துக்கள்...





முனைவர். **க.ஆ. முருகேசன்,**
தமிழ்த்துறை,
ஈரோடு கலைக்கல்லூரி (தன்னாட்சி) ஈரோடு - 638 009.
ஆட்சிப்பேரவை உறுப்பினர், பாரதியார் பல்கலைக்கழகம்.
வீடு : 102, பஜார் வீதி, கவுந்தப்பாடி.
☎ : 0424 - 273004 Resi : 04256 - 40121

# வாழ்த்தும் வணக்கமும்

அன்பிற்கினியீர்!

மனித குல வாழ்க்கைக்கு அடிப்படைகள் உணவு, உடை, உறையுள் ஆகிய மூன்றும் மட்டுமே. இவற்றுள் உடை என்பது மனிதனின் மானங்காப்பதும், அவனை அடையாளப்படுத்துவதுமான செயல்களைச் செய்கிறது. அடிமை இந்தியாவில் சுதேசி ஜவுளிகளால் சுயத்தை இழந்து நின்றோம். அப்போது அண்ணல் காந்தயடிகள் சுதேசி ஜவுளியின் தேவை பற்றிய விழிப்புணர்வை மக்கள் மத்தியில் தோற்றுவித்தார். அதன் பிறகே "சுதேசி வர்த்தகம்" பெருகத் தொடங்கியது.

அப்படி விடுதலைக்கு முன் ஏற்பட்ட விழிப்புணர்வின் தொடர்ச்சியே 1953ல் "கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்" தோற்றம் எனலாம். அது இன்று (02.06.2002) பொன்விழா கொண்டாடுகிறது.

இந்தப் பொன்விழா நாளில் நமது சுதேசி ஜவுளி வர்த்தகத்திற்கு முதுகெலும்பாக உள்ள நெசவாளர்களின் நிலையைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இன்றைய அறிவியல் அவசர உலகில் கைத்தறி நெசவில் சிறந்த நுட்பமான மாற்றத்தை ஏற்படுத்தினால்தான "கைத்தறி நெசவு" நின்று நிலைக்கும். நெசவாளர் நெஞ்சம் குளிரும்.

பொன்விழா காணும் "கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம் விழா நாளில் நெசவாளர்களின் நிலையை உயர்த்த உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும். இந்த நன்னாளில் பொன்விழா சிறக்கவும், நெசவாளர்களின் நிலை சீர்பட்டு உயரவும் வாழ்த்தி வணங்கும்,

*வாழ்த்துக்களுடன்...*

**க. ஆ. முருகேசன்**

வாழ்க சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்
வளர்க சங்கத்தின் நற்பணி



**P. குழந்தைவேலு,**
துணை செயலாளர்,
கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்.

அன்பிற்கினியீர்!

நமது சங்கம் தொடங்கி ஐம்பதாவது ஆண்டின் துவக்கத்தில் பொன்விழா கொண்டாடும் இந்த இனிய வேளையில் நமது ஜவுளி வர்த்தகர் சங்கத்தின் அனைத்து உறுப்பினர் பெருமக்களையும் வணங்குகின்றேன். பொன்விழாவில் சங்கத்தின் புதிய கட்டிடம் திறப்பு விழா நம் அனைவருக்கும் மிக்க மகிழ்ச்சியையும் உற்சாகத்தை ஏற்படுத்தும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

கடந்த 50 ஆண்டுகளாக நமது சங்கம் பல்வேறு நல்ல பொது நலப் பணிகளிலும், கல்வி மற்றும் மருத்துவ உதவிகளை வழங்கி பொதுமக்களின் நன்மதிப்பை பெற்றுள்ளது. இந்த நல்ல பணிகளை நிறைவேற்றிட நமது சங்க உறுப்பினர்கள் காட்டிய நல்லாதரவுக்கும், ஒத்துழைப்பிற்கும் எனது நன்றியினையும் வணக்கத்தினையும். உரித்தாக்குகின்றேன். வரும் காலங்களிலும் இது போன்ற நல்ல சேவைகளை வழங்கிட அனைவரின் ஆதரவையும் அன்பையும் வேண்டுகின்றேன். நமது சங்க உறுப்பினர்களுக்கும் நிர்வாகிகளுக்கு எனது இனிய பொன்விழா வாழ்த்துகளை உரித்தாக்குகின்றேன்.

தங்கள் அன்புள்ள,
**P. குழந்தைவேலு.**



அருட்பெருஞ்ஜோதி **மே.ரா. சந்திரசேகரன்,**
தலைமையாசிரியர் (பணி ஓய்வு),
கவுந்தப்பாடி. ☎ : 41089.

2.6.2002 ஞாயிறன்று சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின் 50-ஆம் ஆண்டு பொன்விழாவிற்கு எனது வாழ்த்துக்கள். கவுந்தி நகரத் தந்தை **P. குப்புசாமி முதலியார்** அவர்கள் பற்றி எனது வாழ்த்து.

உருவத்தில் பெரியவர் உள்ளத்தில் குழந்தை
கற்றது சிறிதளவு கல்லாததோ கடலளவு
கைத்தறி நெசவு செய்து மேலோங்கி வளர்ந்தனை
சிற்றுயிர்க்கு உற்ற துணை கல்வியெனக் கண்டனை
கவுந்தியின் தலைவனாகி கணக்கிலாப் பணி செய்தனை
கடுகினும் சாதிமதபேதமின்றி மக்களோடு பழகினை
கவுந்தி நகரத் தந்தையென எளியோரும் போற்ற உயர்ந்தனை
தொழிலாளர் உயர்வுக்கு பற்பல வழி கண்டனை
தொல்லையென வருவோர்க்கு இல்லையெனாது தந்தனை
வறுமையிலும் ஈகையே நிலை நிற்பதெனக் கண்டனை
வாழ்வில் உழைப்பே உயர்வுதரும் எனக் கண்டனை
வறுமையிலும் கற்போருக்கு உதவிகள் பல செய்தனை
எல்லோரின் வாழ்வின் உயர்வுக்கும் உறுதுணையாய் நின்றனை
எனவே நினக்கு வல்லுநர் பலர் கூடி உமக்கு
சேவாரத்னா என்ற பட்டமும் தந்தனர்
உயர்வுடனே உமது பணிகளை மெச்சி டாக்டர் பட்டமும் வழங்கினர்
ஊருக்கு நீ ஆற்றிய பணிகளாக கணக்கிட்டு உமக்கு
இந்திய தேசிய ராஜீவ் காந்தி அமைதி விருதினை வழங்கினர்
வீரமும் நேர்மையும் ஈகையும் செரிந்த உம் வாழ்வை
கடைப்பிடித்து வாழ்ந்திட உமது அருளுக்கு வணங்கியே
காலமெல்லாம் உம் பணிகளை கடைப்பிடித்து வாழ்ந்திட
கவுந்தியில் சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம் 50 ஆண்டு பொன்விழா காணும்
இந்நன்னாளில் நீவிர் மேலும் பற்பல பணிகள் செய்து பல்லாண்டு
பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகிறேன்.

இப்படிக்கு,
மே.ரா. சந்திரசேகரன்.




**P. நாராயணன்,**

பொருளாளர், சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்,
திருவள்ளுவர் டெக்ஸ், கவுந்தப்பாடி.


பேரன்புடையீர் வணக்கம்.

இப்பவும் பொன்விழா காணும் கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின் அறிவாலயம் புதிய கட்டிடத்தை உருவாக்கி சங்கத்திற்கு பெருமை சேர்த்த தலைவர் திரு.P.குப்புசாமி முதலியார் அவர்களே, வரவேற்புரை நல்கிய செயலர் திரு. A.P. ஆறுமுகம் அவர்களே, புதிய கட்டிடத்தை திறந்து வைத்த கோவை குமரன் சில்க்ஸ், குமரன் தங்க மாளிகை நிறுவனர் குமரன் பரஞ்ஜோதி அவர்களே குத்து விளக்கேற்றிய திருமதி.லதா சம்பத், திருமதி. ராதாமணி குழந்தைவேலு அவர்களே, வெள்ளி விழாவை சிறப்பாக நடாத்திக் கொடுத்து, பல்கலைக் கழக முன்னாள் பதிவாளர் உயர்திரு.C.K. குமாரசாமி M.A., அவர்களே, பொன்விழா மலரை பெற்றுக்கொண்ட திரு. A. விநாயகம் அவர்களே, எங்களது சங்கத்தை உருவாக்கிய வெள்ளிவிழா நாயகர்கள் அமரர். திரு. R.A.N. முத்துசாமி முதலியார் படத்தை திறந்து வைத்த முன்னாள் செயலர் திரு. K. M. தண்டபாணி அவர்களே, அமரர். திரு. P.P. சதாசிவம் அவர்களின் படத்தை திறந்து வைத்த காந்திய சீலர் திரு. S. வையாபுரி முதலியார் அவர்களே, அமரர். திரு. K. முத்துசாமி முதலியார் படத்தை திறந்து வைத்த முதலியார் கல்வி நிறுவன தலைவர் திரு. R.A.N.M. சுந்தரம் அவர்களே,

உங்கள் அனைவருக்கும் பொன்விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தமைக்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன். மேலும் பொன்விழாவில் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கிய முன்னாள் அமைச்சர் திரு.N.K.K.பெரியசாமி அவர்களுக்கும் சட்டமன்ற உறுப்பினர் திரு. K.C.கருப்பணன் அவர்களுக்கும் இந்து கல்வி நிலையத்தின் தலைவர் திரு. K.K. பாலுசாமி அவர்களுக்கும், பாரதிதாசன் கல்லூரி தாளாளர் திரு. N. கிருஷ்ணன் அவர்களுக்கும் ஊராட்சி மன்றத் தலைவர் திரு. பாவா. K.P. தங்கமணி அவர்களுக்கும் சங்கத்தின் முன்னோடி அண்ணார் திரு. M.S. பழனியப்பன் அவர்களுக்கும் மற்றும் சங்க நிர்வாகிகள், உறுப்பினர் பெருமக்கள், பெரியோர்கள், ஆசிரியைகள், தாய்மார்கள், குழந்தைகள் அனைவருக்கும் விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தமைக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் நமது கட்டிடப்பணி சிறப்புற உதவிய அண்ணார் R.M.R. குடோன் ராகவன் அவர்களுக்கும் தர்மாகர்த்தா திரு. R.நடராஜன் அவர்களுக்கும் கட்டிட மேஸ்திரி தங்கராசு அவர்களுக்கும் சங்கத்தின் செயலர், துணைச் செயலர், உபதலைவர் மற்றும் கட்டிடப்பணிக்குழு உறுப்பினர் பெருமக்களுக்கும், மலர் வெளியீட்டு பொறுப்பாளர் திரு. S.R.M. சம்பத் அவர்களுக்கும் கட்டிட நன்கொடையாளர்கள், மலர் விளம்பரதாரர்கள், விழாக் குழுவினர்கள் அனைவருக்கும் சங்கத்தின் சார்பில் எனது நன்றியைத் காணிக்கையாக்குகிறேன்.

இப்படிக்கு,

**P. நாராயணன்**



நிறுவனத் தலைவர்

கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்

கல்வித் தந்தை

டாக்டர் செவாலியர் . R.A.N. முத்துசாமிமுதலியார் அவர்கள்

பொன்விழா ஆண்டு

1953 - 2002

# கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்

பொன் விழா ஆண்டு



K. முத்துசாமி முதலியார் நிறுவன பொருளர்.



1953 – 2002

P.P. சதாசிவம் நிறுவன செயலர்.



தலைவர்

கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்

ராஜீவ்காந்தி தேசிய ஒருமைப் பாடு விருது பெற்ற

ஈகைச்செம்மல் கவுந்தி நகரத் தந்தை

சேவாரத்னா டாக்டர். **P. குப்புசாமிமுதலியார்** அவர்கள்

## பொன்விழா ஆண்டு

## 1953 - 2002

பொன்விழா ஆண்டு

கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்

## நிர்வாகக் குழு



**K.P. ராமலிங்கம்**

துணை தலைவர்



**A.P. ஆறுமுகம்**

செயலர்



**P. குழந்தைவேலு**

துணை செயலர்



**P. நாராயணன்**

பொருளர்

# கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்

மருத்துவமனை வீதி, கவுந்தப்பாடி.

**தோற்றம் 1953**



## பொன்விழா அறிக்கை



கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின் பொன்விழாவின் புதிய கட்டிடமான சேவாரத்னா. டாக்டர். P. குப்புசாமி முதலியார் அறிவாலயம் திறப்பு விழாவின் தலைமை பொறுப்பேற்றுள்ள நமது சங்கத்தின் தலைவர் கவுந்தி நகரத் தந்தை உயர்திரு. டாக்டர். P. குப்புசாமி முதலியார் அவர்களே। புதிய கட்டிடத்தை திறப்பு விழா செய்து நல்வாழ்த்துக்களை தெரிவிக்க வந்துள்ள தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய அளவில் ஜவுளித் தொழிலில் முன்னோடியாக விளங்கும் கோவை குமரன் சில்க்ஸ் மற்றும் குமரன் தங்க மாளிகை குருப் நிறுவனங்களின் உரிமையாளர் மதிப்பிற்குரிய திரு. குமரன் K. பரஞ்சோதி அவர்களே, குத்துவிளக்கேற்றி சிறப்பு செய்ய வந்துள்ள அன்புச் சகோதரிகள் திருமதி. லதாசம்பத் அவர்களே திருமதி.ராதாமணி குழந்தைவேலு அவர்களே பொன்விழா மலரை வெளியீட்டு சிறப்புரை நிகழ்த்தவுள்ள சென்னைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் பதிவாளர் செம்மனச் செம்மல் மதிப்பிற்குரிய திரு.C.K. குமாரசாமி அவர்களே நமது சங்கத்தின் ஸ்தாபகத் தலைவர்கள் அமரர். R.A.N. முத்துசாமிமுதலியார், அமரர். P.P. சதாசிவம் அமரர். K. முத்துசாமிமுதலியார் திரு உருவப்படங்களைத் திறந்து வைத்து சிறப்புறச் செய்ய வந்துள்ள சங்கத்தின் முன்னாள் செயலாளர் திரு.K.M.தண்டபாணிஅவர்களே மகாத்மா காந்திஜி கோவில் நிறுவனர் திரு.S. வையாபுரி முதலியார் அவர்களே முதலியார் கல்வி நிறுவனங்களின் தலைவர் திரு.R.A.N.M. சுந்தரம் அவர்களே வாழ்த்துரை வழங்கி சிறப்பிக்கவுள்ள முன்னாள் கைத்தறித் துறை அமைச்சர். திரு. N.K.K. பெரியசாமி அவர்களே பவானி சட்டமன்ற உறுப்பினர் திரு. K.C. கருப்பணன் அவர்களே முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் S.N.பாலசுப்பிரமணியம் அவர்களே திரு.மணிவண்ணன் அவர்களே திரு.பாவா.K.P. தங்கமணி அவர்களே ஈரோடு இந்து கல்வி நிலையத்தின் தாளாளர் மற்றும் தலைவர் தொழிலதிபர் திரு. K.K. பாலுசாமி அவர்களே பாரதிதாசன் கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் தாளாளர் மற்றும் செயலாளர் திரு. N. கிருஷ்ணன் அவர்களே சங்கத்தின் மூத்த உறுப்பினர் திரு. M.S. பழனியப்பன் அவர்களே சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின் நிர்வாகிகளே மதிப்பிற்குரிய உறுப்பினர் பெருமக்களே பெரியோர்களே தாய்மார்களே சகோதரிகளே நண்பர்களே உங்கள் அனைவருக்கும் என் வணக்கத்தை தெரிவித்துக்கொள்கிறேன். இந்த இனிய விழாவில் சங்கத்தின் பொன்விழா அறிக்கையை வழங்குவதில் பெருமையும் மிக்க மகிழ்ச்சியும் அடைகின்றேன்.

கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம் 1953-ஆம் ஆண்டு மே மாதம் 17-ஆம் நாள் பதினேழு உறுப்பினர்களுடன் ஆரம்பிக்கபட்டது. நமது ஊரின் பொது நலம் போற்றுதே முக்கிய குறிக்கோளாய் அமைந்தது. குறிப்பாக குழந்தைகளின் கல்வி வளர்ச்சி, மருத்துவ உதவி மற்றும் சமூக சேவை தேச நலன் ஆகியவைகளில் சங்கம் தீவிர கவனம் செலுத்தி பல்வேறு நலத்திட்டங்களில் ஈடுபட்டு நன்மைகள் செய்துள்ளது.

நமது சங்கத்தின் ஸ்தாபக தலைவராக அமரர். திரு. R.A.N. முத்துசாமி முதலியார் அவர்களை தலைவராகவும் அமரர். திரு. P.P. சதாசிவம் அவர்கள் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு மிகச் சிறப்பாகவும் செம்மையாக செயல்பட்டு வந்துள்ள ஆரம்பக் காலத்தில் சங்க உறுப்பினர்கள் அனைவரும் அவர்கள் செய்து வந்த வியாபாரத்தில் ஒவ்வொரு பில்லுக்கும் 6 பைசா வீதம் கல்வி நிதி வசூல் செய்து சங்கத்திற்கு கொடுத்து வந்தனர். அந்த நிதியிலிருந்து சங்கம் ஆரம்பப்பள்ளி மாணவ, மாணவியர்களுக்கு உபகாரச் சம்பளம் நோட்டுப் பத்தகங்களும் இலவசமாக கொடுத்து உதவி வந்தது.

கவுந்தப்பாடி ஆரம்ப சுகாதார நிலையம் அமைக்க வேண்டி 1959-ஆம் ஆண்டு அன்றைய தலைவர் திரு. R.A.N. முத்துசாமி முதலியார், திரு.P.P.சதாசிவம், திரு.R.P.A. நடராஜன், திரு.K.முத்துசாமி முதலியார், திரு.M.U.பெருமாள் முதலியார் திரு.P. குப்புசாமி முதலியார், திரு.B.N.வேலப்பமுதலியார், திரு.K.C.ராமசாமி முதலியார், திரு.N.P.குப்புசாமி முதலியார், திரு.K.M.கிருஷ்ணன், ஆகிய சங்க உறுப்பினர்கள் 10 பேர் சேர்ந்து ஆரம்ப சுகாதார நிலையம் அமைக்க இடம் முழுவதையும் நன்கொடையாக வழங்கினர் அன்றைய சட்டமன்ற உறுப்பினர் திரு.G.குருமூர்த்தி மாவட்ட கழக உறுப்பினர் திரு.N.மாணிக்கம் அவர்களின் உதவியுடன் ஆரம்ப சுகாதார நிலையம் அமைய உதவி செய்தனர் அவர்களுக்கும் நமது சங்கம் மிகவும் கடமைப்பட்டுள்ளது

1958-ஆம் ஆண்டு முதல் 1961-ஆம் ஆண்டு வரை ஒவ்வொரு ஆண்டும் 2000 நோட்டுப் பத்தகங்கள் அச்சிட்டு பள்ளி குழந்தைகளுக்கு இலவசமாக வழங்கப்பட்டது.

1959ஆம் ஆண்டு நெசவுத் தொழிலில் ஏற்பட்ட நெருக்கடியினைப் போக்கிட சென்னையில் அமைச்சர்களையும் அதிகாரிகளையும் சந்தித்து அன்றைய தலைவர் திரு.R.A.N. முத்துசாமி முதலியார் அவர்களும் செயலாளர் திரு. P.P. சதாசிவம் அவர்களும் நெசவாளர்களுக்கு குறைந்த விலையில் நூல் கிடைக்க ஏற்பாடு செய்து துணி விற்பனைக்கு வழி வகை கண்டு நெசவாளர் பெருமக்களுக்கு பெரிய நிவாரணம் தேடிக் கொடுத்தது குறிப்பிடத்தக்கது.

நமது சங்கத்தின் கட்டிடம் 1959-ஆம் ஆண்டு வாங்கப்பட்டு 1960-ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டு முன்புறம் இரண்டு கடைகளும் அன்றைய சங்கத்தின் பொருளாளர் திரு. K. முத்துசாமி முதலியார் அவர்களின் மேற்பார்வையில் கட்டிடப் பணி முடிக்கப்பட்டது.

1960 ஆம் ஆண்டு ஈரோடு சோழீசுவரர் திருக்கோவில் திருப்பணிக்காக ரூபாய் 500/- சங்கத்தின் சார்பாக நன்கொடை வழங்கப்பட்டது.

அரசின் அனுமதி இல்லாமல் இயங்கி வரும் விசைத்தறிகள் அனைத்திற்கும் அரசு லைசென்ஸ் வழங்க வேண்டும் என்று 8.1.1961 ஆம் நாள் தீர்மானம் நிறைவேற்றி அரசுக்கு வேண்டுகோள் விடுத்து அதன்படி தலைவர் திரு. R.A.N. முத்துசாமி முதலியார் அவர்களும் செயலர் திரு.P.P.சதாசிவம் ஆகியோர் உள்ளிட்ட தூதுக்குழு சென்னை சென்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் அப்போது இருந்த தமிழக தொழில்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. R. வெங்கட்ராமன் அவர்களையும் மத்திய அமைச்சர் மாண்புமிகு. லால்பகதூர் சாஸ்திரி அவர்களையும் சந்தித்து விசைத்தறி நெசவாளர்களுக்கு அரசு கடன் வழங்கி உதவிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டது குறிப்பிடத்தக்கது. இச்செய்தி அன்றைய தினம் HINDU நாளிதழில் பெரிய அளவில் செய்தி வெளியிடப்பட்டது.

தலைவர் திரு. R.A.N. முத்துசாமி முதலியார் அவர்கள் மகன் திரு. M. சுந்தரம் B.E., அமெரிக்கா சென்று படித்து பட்டம் பெற்றமைக்காக சங்கத்தின் மூலம் பாராட்டு விழா 25.08.61ஆம் நாள் நடைபெற்றது.

நூல் கிடைப்பதில் தட்டுப்பாடு ஏற்பட்டதால் 29.04.1962 ஆம் நாள் தீர்மானத்தின் படி தலைவர் திரு. R.A.N. முத்துசாமி முதலியார் செயலர் திரு. P.P. சதாசிவம் சென்னை சென்று அதிகாரிகளையும் அமைச்சர்களையும் சந்தித்து சங்கத்தின் மூலம் நூல் கிடைக்க ஏற்பாடு செய்து தட்டுப்பாடு நிலவிய காலம் முழுவதும் சங்கமே நூல் வாங்கி உறுப்பினர்களுக்கு விநியோகம் செய்தது பெருத்த உதவியாக இருந்தது.

1962ஆம் ஆண்டு சங்கத்தின் கட்டிடத்தை ரூபாய் 3000/- செலவு செய்து புதுப்பித்தது. நமது நாட்டை வஞ்சக சீனர்கள் தாக்கியபோது நமது வீரர்கள் வெற்றி வாகை சூடவும் பெற்ற சுதந்திரத்தை பேணிக்காக்கவும் சங்கத்தின் சார்பில் 1962 நவம்பர் மாதம் 11–ம் நாள் ரூபாய் 1000/- நன்கொடையாக சங்கம் அரசுக்கு அனுப்பி வைத்தது.

1963 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 21 ஆம் நாள் சங்கத்தின் சார்பில் பழனி, மதுரை, தேக்கடி, வைகை ஆகிய இடங்களுக்கு உல்லாசப்பயணம் சென்றுவர ஏற்பாடு செய்யப்பட்டது.

1963 ஆம் ஆண்டு மேமாதம் 10 ஆம் ஆண்டு விழாவில் அன்றைய நாடாளுமன்ற உறுப்பினர் திரு.K.S.ராமசாமி B.A.B.L., அவர்களால் அண்ணல் மகாத்மாகாந்தி, ஜவஹர்லால் நேருஜி, தலைவர் காமராஜர் மற்றும் R.A.N.முத்துச்சாமி முதலியார் ஆகியோரது திருவுருவப்படம் திறந்து வைக்கப்பட்டது.

1965 மே மாதம் 7ஆம் நாள் தீர்மானத்தின்படி நமது ஊரில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ஆரம்பிக்க சங்கத்தின் மூலம் ரூ.10,000/- நன்கொடையாக கொடுக்கப்பட்டது. திரு. P.குப்புசாமி முதலியார் அவர்கள் கட்டிட கமிட்டி தலைவராக இருந்து பணியாற்றினார்.

1966 ஜீலை மாதம் 2 ஆம் நாள் நமது சங்க கட்டிடத்தை அன்றைய கூட்டுறவு அமைச்சர் மாண்புமிகு N.S.S.மன்றாடியார் அவர்கள் தலைமையில் முதல் அமைச்சர் மாண்புமிகு M.பக்தவச்சலம் அவர்கள் திறந்து வைத்து சிறப்பித்தார்.

1970-ஆம் ஆண்டு சங்கத்தின் மூலமாக மழலையர் பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டது. பள்ளியை கவனித்து நடத்தி வர தலைவர் R.A.N.முத்துச்சாமிமுதலியார் செயலர் P.P.சதாசிவம் துணை செயலாளர் R.P.A.விஸ்வநாதன் M.S. பழனியப்பன் பொருளாளர் D.வெங்கிடுசாமி ஆகியோர் கொண்ட குழு அமைக்கப்பட்டது பள்ளி சிறப்பாக நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது.

1970- ஆம் ஆண்டு ஜனவரி 15-ஆம் நாள் தீர்மானத்தின்படி தலைவர் R.A.N.முத்துச்சாமி முதலியார் செயலாளர் P.P. சதாசிவம் ஆகியோர் நம் வட்டாரத்தில் கல்லூரி அமைக்க பெரும் முயற்சி செய்தார்கள். அந்த முயற்சியின் பயனாக ஈரோடு கலைக் கல்லூரி அமைக்கப்பெற்று சிறப்புற நடந்து வருகின்றது என்பது யாவரும் அறிந்ததே.

1982-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 25-ஆம் தேதி நமது சங்கத்தின் வெள்ளிவிழா கொண்டாடப்பட்டது.

நமது ஊரில் ஒன்றிய துவக்கப்பள்ளி அமைக்க பள்ளியின் கட்டிட குழு பொருளாளர் Dr. மெய்நாதன் M.B.B.S., வசம் சங்கத்தின் சார்பில் ரூபாய் 1000/- நன்கொடை வழங்கப்பட்டது. 1985-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 27, 28, 29 தேதிகளில் சங்கத்தின் மூலம் நமது உறுப்பினர்கள் இன்பச் சுற்றுலா செல்ல ஏற்பாடு செய்யப்பட்டது.

1986ஆம் ஆண்டு ஜூன் மாதம் நமது சங்க உறுப்பினர்கள் அனைவரும் நான்கு நாட்கள் மதுரை ராமேஸ்வரம் கன்னியாகுமரி திருச்செந்தூர், பழனி ஆகிய இடங்களுக்கு சுற்றுலா சென்று வர ஏற்பாடு செய்யப்பட்டது. 1989-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 2 நாள் குருவாயூர் கொச்சி சுற்றுலா சென்று வர ஏற்பாடு செய்யப்பட்டது.

1990-ஆம் ஆண்டு நமது சங்க வளாகத்தில் மேல்நிலைக் குடிநீர் தொட்டி அமைக்கப்பட்டு அப்போதைய ஈரோடு மாவட்ட ஆட்சித்தலைவர் திரு.V.K.சுப்புராஜ் அவர்கள் தலைமையில் மாண்புமிகு அமைச்சர் திருமதி. சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்களால் மேல்நிலைத் தொட்டி திறப்புவிழா செய்து பொதுமக்களுக்கு குடிநீர் வழங்க சங்கம் ஏற்பாடு செய்து கொடுத்தது குறிப்பிடத்தக்கது.

1992-ஆம் ஆண்டு நமது சங்கத்தின் துணைத்தலைவர் திரு. P. குப்புசாமிமுதலியார் அவர்களின் 70-வது ஆண்டு விழா நமது சங்க வளாகத்தில் சிறப்பாக நடத்தி அண்ணார் அவர்களை பாராட்டியது.

1993-ஆம் ஆண்டு நமது சங்கத்தின் துணைத்தலைவர் நகரத்தந்தை திரு. P. குப்புசாமிமுதலியார் அவர்களுக்கு சேவாரத்னா. டாக்டர் பட்டம் பெற்றமைக்காக அண்ணார் அவர்களை பாராட்டி நினைவுப் பரிசு வழங்கி கௌரவித்தது.

1994-ஆம் ஆண்டு நவம்பர் 4-ஆம் நாள் நமது தலைவர் திரு.R.A.N.முத்துசாமிமுதலியார் அவர்களுக்கு செவாலியர் டாக்டர் பட்டம் பெற்றமைக்காக P.K. திருமண மண்டபத்தில் விழா நடத்தி அண்ணார் அவர்களை பாராட்டி சிறப்புச் செய்து கௌரவித்தது.

1996 ஆம் ஆண்டு கவுந்தப்பாடி செல்வ மஹால் திருமண மண்டபத்தில் நடைபெற்ற அனைத்து சங்க கூட்டமைப்பு பாராட்டுக் கூட்டத்தில் நடைபெற்ற தேர்தலில் வெற்றி பெற்று கைத்தறித்துறை அமைச்சர் பொறுப்பேற்ற மாண்புமிகு. திரு. N.K.K. பெரியசாமி அவர்களையும் நாடாளுமன்ற உறுப்பினர் திரு. V.P. சண்முகசுந்தரம் அவர்களையும் சட்டமன்ற உறுப்பினர் திரு. S.N. பாலசுப்பிரமணியம் அவர்களையும் பாராட்டி நடைபெற்ற விழாவில் நமது சங்கமும் இணைந்து பங்கு பெற்றது.

1996 – ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 13ஆம் நாள் நமது சங்க உறுப்பினர்கள் அனைவரும் தலைவர் திரு. R.A.N. முத்துசாமிமுதலியார் தலைமையில் புட்டபர்த்தி ஸ்ரீ சைலம் மந்திராலயம் மற்றும் மஹாநந்தி ஆகிய ஸ்தலங்களுக்கு சுற்றுலா சென்று வர ஏற்பாடு செய்யப்பட்டது.

1998ஆம் ஆண்டு நமது சங்கத்தின் சார்பில் உறுப்பினர்கள் அனைவரும் ராமேஸ்வரம் சென்று அங்கு பொதுப் பேரவைக் கூட்டம் நடத்தப்பட்டது.

1999-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 30 – ஆம் தேதி நமது தேச நலனில் நாட்டம் கொண்ட நமது சங்கம் கார்கில் போரில் தங்களது இன்னுயிர் நீத்த நமது ராணுவ வீரர்களின் நிவாரண நிதிக்காக நமது சங்கத்தின் தலைவர் திரு. R.A.N. முத்துசாமி முதலியார் அவர்களும் துணைத்தலைவர் திரு. P. குப்புசாமி முதலியார் அவர்களும் சங்க பொருளாளர் திரு. P. நாராயணன் அவர்களும் மற்றும் சங்க உறுப்பினர்கள் A.P.ஆறுமுகம், P. குழந்தைவேலு,K.P. ராமலிங்கம், S. லட்சுமணன், K.P. சிவலிங்கம் ஆகியோர் குழுவாக செயல்பட்டு நமது சங்க உறுப்பினர்களிடம் நன்கொடையாக நிதி பெற்று ரூபாய் 1,00,000 ஒரு லட்சம் ஈரோடு மாவட்ட ஆட்சியர் உயர்திரு. கருத்தையா பாண்டியன் அவர்களிடம் வழங்கியதை மிக்க பெருமையுடன் தெரிவிக்கின்றேன்.

